நன்னெறியாவது உ நமச்சிவாயவே

# சைவ சமய சாரம்



திருச்சிராப்பள்ளி

சைவசமய பரிபாலன சபையாரின் பிரசுரம்

சிவகருமஞ் செய்யார் திருநீறு சாத்தார்
தவநிலையாஞ் சைவநெறி சாரார் அவனித்னில்
கான்பரந்த பச்சைக் களாநிழலைக் கைதொழா
ஏன்பிறந்தார் மானிடராய் இன்று.

2. பிறந்த பிறப்பிற் பெரும்பயனை யோரார்
இறந்தவுட லெண்ணிறந்த தென்பது—அறிந்
[திருந்து
கானடரும் பச்சைக் களவீச என்னுமல்
மானிடராய் ஏன் பிறந்தார் வந்து.

—கருவை வெண்ப

3. முத்தாந்த வீதி முளரிதொழு மன்பருக்கே
சித்தாந்த வீதி வருந்தேவே பராபரமே.

4. முத்தாந்த வித்தே முளைக்குநில மாயெழுந்த
சித்தாந்த மார்க்கச் சிறப்பே பராபரமே.

—தாயுமானு



இந்நூற் பிரதிகள் விலைக்கு கிடைக்கும் இடம்:—

நாவலர் வித்தியாநுபாலன அச்சகம்,
நெ. 300, தங்கசாலைவீதி, சென்னை-1

சிவமயம்

# சைவ சமய சாரம்

பிக்ஷாண்டார் கோயில் பெருநிலக்கிழார்

இராயபகதூர்

கோ. இராசகோபால பிள்ளையவர்கள் F. R. H. S.

விரும்பியபடி

யாழ்ப்பாணம் புலோலிநகர்

சு. சிவபாதசுந்தரம் B. A.

செய்தது

ஷை பிள்ளையவர்கள் பிரசுரம் செய்தது

துன்முகி சித்திரை ] [ விலை அணா 6.

| | | | | |
|---|---|---|---|---|
| 1-வது | பதிப்பு | அக்டோபர் | 1947 (2000) | பிரதிகள். |
| 2-வது | ,, | ஆகஸ்டு | 1950 (1000) | ,, |
| 3-வது | ,, | பிப்ரவரி | 1951 (3000) | ,, |
| 4-வது | ,, | மே | 1951 (2000) | ,, |
| 5 வது | ,, | செப்டம்பர் | 1953 (2000) | ,, |
| 6-வது | ,, | மார்ச் | 1954 (3000) | ,, |
| 7-வது | ,, | ஆகஸ்டு | 1954 (3000) | ,, |
| 8-வது | ,, | மே | 1956 (3000) | ,, |



வித்தியாநுபாலன அச்சகம்,
நெ. 300, தங்கசாலைவீதி, சென்னை-1.

# பொருளடக்கம்



---

# முகவுரை

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின்.

சைவசமய சாரமெனப் பெயரிய இச்சிறு நூல் பள்ளியிற் படிக்கும் சிறுவர்களுக்கும் சாமானிய ஜனங்களுக்கும் பயன்படும்படி எளிய தமிழ் நடையிலும் முறையிலும் அமைக்கப்பட்டுள்ளது. பிக்ஷாண்டார் கோயில் பெருநிலக்கிழாரும் வைதிக சைவ சிகாமணியுமாகிய ஸ்ரீமத் கோ. இராசகோபால பிள்ளையவர்களது வேண்டுகோளின்படி சைவப் பெரியாரும் எனது பழைய நண்பருமாகிய புலோலி ஸ்ரீமத் சு. சிவபாதசுந்தரம் பிள்ளையவர்களால் எழுதப் பட்டது. இவ்விருவரும் வழி வழிச் சிவனடியார் பரம்பரையில் வந்தவர்கள். சமயத் தொடர்பினால் இவ்விரு குடும்பத்தினரும் பல தலைமுறைகளாக நட்புரிமை பூண்டவராவர். தொன்று தொட்டு இங்ஙனம் ஏற்பட்ட நட்புரிமை தடித்துப் பந்துத் துவத்தையும் நாளடைவில் உண்டாக்கிவிட்டது. கிழாரின் முன்னோர்களில் ஒருவராகிய பறங்கிப் பேட்டைத் துரைசாமி சுவாமிகள் அறுபது ஆண்டு களுக்கு முன் சிவஞானியராக விளங்கியவர். அந்தச் சாமுசித்தரின் தந்தையாராகிய ஸ்ரீமத் இராஜசேகரம் பிள்ளையவர்களை நமது ஆசிரியர் சிறிய தந்தையாராக முறைமை பாராட்டி வந்தனர். அவ்வழியே ஸ்ரீ இராசகோபால பிள்ளையவர்களும்

இவரைச் சிறிய தந்தையாராக முறைகொண்டனர். பிள்ளையவர்களின் மனைவிமக்களும் அம்முறைமைக் கியைய இவரிடம் நடந்து வந்தனர்.

நமது கிழார் பரோபகாரமே உருவாகக் கொண்டவர். வைதிக சைவ பரிபாலனத்தில் கண்ணுங் கருத்துமாயுள்ளவர். கல்விச்சாலை, வைத்திய சாலை, உணவுச்சாலை முதலியவற்றை ஏற்படுத்திச் செவ்வனே நடாத்துபவர். பெருந் தமிழபிமானி; சங்கீதப்பிரியர்; தமிழ்ப் பண்டிதர்களையும் இசை வல்லோர்களையும் சம்ஸ்கிருத சாஸ்திரிகளையும் நன்கு ஆதரிப்பவர். இரண்டு ஆண்டுகளுக்கு முன் சைவ பரிபாலன சபையொன்றைத் திருச்சி ஜில்லா வைச்சேர்ந்த லால்குடியில் ஏற்படுத்தி அதன் மூலமாகப் பல துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டு உபகரித்தவர். 5-5-47-ல் ஓர் சைவ சபையினைக் கூட்டிப் பல தீர்மானங்களை நிறைவேற்றி அரசின ருக்கு அறிவித்தவர். உத்தமர் கோவில் கிராம வைத்திய சிகிச்சைப் பாதுகாப்பு முதலியவற்றிலும் விவசாயத்தொழில் அபிவிருத்தியிலும் பெருவிருப்ப முடையவர். தென்னிந்திய வேளாண்மை என்னும் விவசாய பாட நூலொன்றைத் தமிழில் எழுதி வெளியிட்டவர். விவசாயத்துக்குரிய புது உபகர ணங்களைச் செய்து பயிர் விளைவை அதிகரிக்கச் செய்வதற்கு வழிகாட்டும் விற்பன்னர். விவசாய சம்பந்தமான பலகருத்துகளைப் பத்திரிகை மூலமாக எழுதி பலருக்கும் நன்மை புரிபவர்; வானொலி (Radio-talks) மூலமாகவும் அறிவிப்பவர். Homoe-

pathic மருந்துகளை ஏழைகளுக்கு இலவசமாகவும் மற்றவர்களுக்குக் குறைந்த விலைக்கும் கொடுக்க வேண்டிய ஒழுங்குகளைச் செய்துள்ள தருமகுண சீலர். இவர் பல ஆண்டுகளாகப் புரிந்து வந்த பொதுசன நன்மைகளுக்காக பிரிடிஷ் அரசாங்கத்தாரால் இவருக்கு 1946 ஆண்டில் இராயபகதூர் பட்டம் அளிக்கப்பட்டது. பிரபுத்துவம் உடையவர். திருத்தொண்டத் தொகையாளியால் "திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கு மடியேன்" என்று போற்றப்பட்ட திருவாரூர் அடியவர் குழாத்தின் வழித்தோன்றிய புண்ணியசாலி. இப்புண்ணிய வசத்தினாற்போலும் இவருக்குச் சைவப்பற்று இயல்பாகவே உளதாயிற்று. சிவபக்தியிற் சிறந்தவர். தினந்தோறும் தேவாரம், திருவாசகம், வால்மீகர் இராமாயணம், அபிராமியந்தாதி முதலியவற்றைப் பன்முறை பாராயணஞ் செய்பவர். ஸ்ரீ தியாகேசர் ஸ்ரீ கமலாம்பிகையம்மைமீது நமது முன்னோரால் பாடப்பட்ட வடமொழி, தென்மொழிப் பிரபந்தங்களை அச்சிடுவிக்கும் திருப்பணியிலும் ஈடுபட்டிருக்கின்றவர். தியாகராச லீலையைத் தமிழில் மொழிபெயர்ப்பித்துப் பெரும்பொருள் செலவிட்டு அச்சிட்டு வருகின்றவர். "தவமுந் தவமுடையார்க்காகும்" என்பது பொய்யாமொழியன்றோ?

யாவரும் சைவசமயத்தை அறியவேண்டுவது முக்கியம் என்னும் பேராசையினால் உந்தப்பட்டவராய் நமது கிழார் இலகுவான தமிழ் வசன நடையில் சிறுவரும் சாமானிய படிப்புடையவர்களும் உணரக்

கூடிய சிறு சைவ நூலொன்று எழுதப்படவேண்டு மென்று பல நாட்களாக ஆர்வங்கொண்டிருந்தார். அத்தகைய அரிய நூலை எழுதக்கூடியவர் நமது சைவப் பெரியாரொருவரே யெனத்தேறித் தெளிந்து அவர்களிடம் தமது மனதை வெளியிட்டனர். அங்ஙனமே அப்பெரியார் இச்சிறிய நூலை எழுதி யுதவினர்கள்.

இதில் ஏழு பாடங்கள் உள்ளன: முதற் பாடத்திலே கடவுளுடைய பெருமையும், அவருடைய எல்லையில்லாத அன்பும் அவரை நினைக்குந்தோறும் நமது மனங்கசிந்துருகவேண்டிய முறைமையும், அவரே என்றும் துணையாயுள்ளவரென்பதும் விளக்கப்படுகின்றன. இரண்டாம் பாடம் ஆன்மாக்களின் இயல்பையும், நாம் பிறவி எடுப்பதின் நோக்கம் சிவபிரானது திருவடியை அடைதலென்பதையும், ஆகவே நாம் திருவடி யாத்திரைகாரரென்பதையும், தல யாத்திரை செய்வோர் எத்தொழிலைச் செய்யினும் யாத்திரையிலே கண்ணுயிருப்பதுபோல நாமும் என்றும் அத்திருவடி யாத்திரையிலே கண்ணுயிருத்தல் வேண்டுமென்பதையும் காட்டுகின்றது. மூன்ரும் பாடம் கடவுளை வழிபடும் முறைமையைக் கூறுகின்றது. நான்காம் பாடம் நல்வினை தீவினைகளின் இயல்பும் அவற்றின் பயனும், தீவினையினின்றும் விலகுதற்கு உபாயமும் இயம்புகின்றது. ஐந்தாம் பாடத்தில் சைவ வாழ்க்கை விளங்குமிடத்து "சைவ வாழ்க்கையிலே துன்பத்துக்காயினும் துக்கத்துக்காயினும் கோபத்

னுக்காயினும் அச்சத்துக்காயினும் இடம் வராது" என்பது நன்கு காட்டப்படுகின்றது. ஆறும் பாடம் சைவ சமயத்தவரது நித்திய கடன்களையும், ஏழாம் பாடம் சைவத்தின் மகத்துவத்தையும் கூறு கின்றன.

இத்தகைய அரிய நூலைச் சிறியவர்களும் மற்றையோரும் வாங்கிப் படித்து உய்வார்களாக!

"பொறுப்ப ரென்புன் சொலின் பொருளே."

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீய தெல்லா மரனுமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்.

---

திருமயிலை,
சர்வசித்து
விஜயதசமி.

சே. வெ. ஜம்புலிங்கம்.

நின்று மிருந்துங் கிடந்து நடந்துநினை
என்றுஞ் சிவன்தா ளிணை.

# நூலாசிரியரின்

# சரித்திரச் சுருக்கம்

இந்நூலாசிரியராகிய **சு. சிவபாதசுந்தரம் பிள்ளையவர்கள்** யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த புலோலியிலே ஈசுரஞு தைமீ 17உ (1878-ல்) பிறந்தார். இவருடைய தந்தையார்; **வ. சுப்பிரமணிய பிள்ளை**; தாயார்: **வள்ளியம்மையார்**. தந்தையாரும் அவரது இளைஞர்களாகிய வ. குமாரசாமிப் புலவர், வ. கணபதிப் பிள்ளை, பார்வதி அம்மையார் ஆகிய மூவரும் தமிழிற் பெரும் புலமையுடையவர்களே. இந்நால்வரும் நமது ஆசிரியருக்குச் சிறுவயதிலேயே தமிழ்க் கல்வியையும் சைவ நன்னெறியையும் புகட்டி வைத்தனர்.

தென்னிந்தியாவிலே உயர்தர ஆங்கிலக் கல்வியைப் பயின்று சென்னைச் சர்வ கலாசாலை B.A. பரீக்ஷையிற் சித்தி பெற்றூர். B.A. பரீக்ஷக்கு இவர் பாடமாகக்கொண்டது கணித சாத்திரம். B.A. படிப்பு முடிந்ததும் இவர் யாழ்ப்பாணத்திற்குத் திரும்பிச் சென்று அங்கே முப்பத்தைந்து ஆண்டுகளாக உபாத்திமைத் தொழிலை நடாத்தினர். இவற்றுள் 1924 முதல் 1933 வரை சுழிபுரம் விக்டோரியா கலாசாலையின் தலைவராகக் (Principal) கடமை செலுத்தினர். அக்கலாசாலையை விட்டு விலகியபின்னர்ச் சில ஆண்டுகள்

மறைகள்நிந்தனை சைவநிந்தனை பொருமனமுடைய இவர்கள் எழுதிய கடிதமொன்றில் கிறிஸ்து மதத்தால் சைவத்துக்கு ஏற்படும் கெடுதி நன்கு விளக்கப் பட்டுள்ளது. அதனை நீக்கவேண்டிய வழியும் உணர்த்தப் பட்டிருக்கின்றது. அக்கடிதம் வருமாறு:—

“சைவ சமயத்தவர்கள் இதர சமயத்தார்களாலே வஞ்சிக்கப்பட்டுச் சைவ சமயத்தைக் கைவிடுதலைத் தவிர்க்க வேண்டுமென்பது எனது பேராசை. சில வாரங்களின் முன் சேலம் ஜில்லாவில் மூன்று கிராமங்கள் முற்றாகக் கத்தோலிக்க மதத்துட் பிரவேசித்தனவென்றும் வேறு மூன்று கிராமங்கள் பிரவேசிக்குமென்றும் ஒரு பத்திரிகையிலே வாசித்தேன். சித்தியாரிலே முதற்பாகம் பிறமத கண்டனம். அதற்கு அவ்வளவு முதன்மையுள்ளது. நான் என் வாழ்நாளைக் கிறிஸ்துமத கண்டனத்துக்கே அர்ப்பணஞ் செய்திருந்தேன். கிறிஸ்துமதகண்டன நூலொன்று விஸ்தாரமாய் எழுதுவதற்கு நான் தொடங்கியபோது, சைவ நூல் ஒன்றாயினும் எழுதுவதற்கு முன் பிறமத கண்டன நூல் எழுதுதல் பொருத்தமற்றதெனக் கண்டு சைவ போதம் முதற் புத்தகத்தை எழுதினேன். அது போதியதன்றெனக்கண்டு இரண்டாம் புத்தகத்தை எழுதினேன். இப்படியே மற்றவைகளையும் எழுதினேன். இவை என்னுடைய நேரத்தைக் கவர்ந்தமையால் நான் தொடக்கத்திலே எழுதுவதற்கு எண்ணியிருந்த கிறிஸ்துமத கண்டன நூல் எழுதப்

படாமற் போயது. களையை (weeds) அழித்தாலன்றிப் பயிர் வளரமாட்டாது. கிறிஸ்துமதச் செல்வாக்கைக் கெடுத்தாலன்றிச் சைவம் வளரமாட்டாது. கிறிஸ்துமத கண்டனப் பிரசாரம் அதிகம் செய்திருக்கிறேன். கிறிஸ்துமத கண்டன லகு லேகங்களும் (tracts) எழுதி யிருக்கிறேன்."

இவர்களுடைய வேறு பிரசுரங்களாவன :—

(1) சைவ போதம் (முதற் புத்தகம்)

[புராண கதை வாயிலாகச் சைவ வாய்மைகளைப் புகட்டுவது ; சிறுவர்களுக்கும் மற்றவர்களுக்கும் ஏற்றது.]

(2) சைவ போதம் (இரண்டாம் புத்தகம்)

[சைவ சித்தாந்த சாத்திரக் கருத்துகளைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் போதிப்பது. தாவர உணவின் மேன்மையையும் புலால் உணவின் இழிவையும் காட்டுவது ]

(3) திருவருட்பயன் விளக்கவுரை

[மெய்கண்டசாத்திரம் பதினான்கில் சுருக்கமான நூல்களுள் ஒன்றாயது திருவருட்பயனாகும். இதுதிருக்குறளைப்போல் மிக ஆழ்ந்த கருத்துகளைக்கொண்டது. அதனை உரையின்றிக் கற்பது எளிதன்று. பழைய உரைகள் இந்நூற்கு எழுதப்பட்டிருப்பினும், அவை இக்காலத்து மாணவர்களுக்குப் பயன்படா. இக்குறையை நீக்க வந்தது இவ்விளக்கவுரை யென்பது மிகையன்று.]

(4) சைவக்கிரியை விளக்கம்

[எமது நித்தியானுஷ்டானங்களில் பலவற்றை யாம் காரணமறியாமலே யந்திரம்போல் செய்து வருகின்றோம். மணச் சடங்கு, பிணச் சடங்கு, சிராத்தம், சந்தியாவந்தனம் முதலிய கருமங்கள் எப்படிச் செய்ய வேண்டும் ஏன் செய்ய வேண்டும் என்பன இச்சிறு நூலில் நன்கு விளங்கப்பட்டுள்ளன.]

(5) கந்த புராண விளக்கம்

[கந்தபுராணத்தின் மகிமையைச் சுருக்கமாகக் கூறுவது. அரும்பாடல்களின் பொருளைச் சாத்திர மூலமாக எடுத்துப் புகட்டுவது. புராணம் பொய் என்பவருக்கு நற்புத்திபுகட்டுவது.]

(6) திருவாசக மணிகள்

[சில திருவாசகப் பாசுரங்களின் அரும் பெரும் பொருளை விளக்குவது. திருவாசக பாராயண விருப்பத்தை உண்டுபண்ணக்கூடியது.]

(7) அகநூல்

[Psychology என்னும் மனோ தத்துவ சாத்திரத்தைத் தமிழில் போதிப்பது]

(8) படிப்பிக்கும் முறைகளும் விதிகளும்

[உபாத்தியாயர்களுக்கு ஏற்றது. அவர்களுக்குப் பாடபுத்தகமாக இலங்கை அரசினரால் ஏற்படுத்தப்பட்டது.]

(9) திருப்பெரு வடிவம்

[கந்த புராணத்திற் சூரபன்மன் வதைப் படலத்திலுள்ள 32 திருவிருத்தங்களின் விரிவுரையைக் கொண்டது. முருகப்பிரானுடைய விசுவரூப தரிசனத்தை நனி விளக்குவது. எனது வேண்டுகோளின்படி ஆசிரியரால் 1939-ம் ஆண்டில் எழுதப்பட்டு அச்சானது. இதன் இரண்டாம் பதிப்பு யாழ்ப்பாணத்துச் சைவ பரிபாலன சபையாரால் 1948-ல் அச்சிடப்பட்டுள்ளது.]

(10) Saiva School of Hinduism

[சைவ சித்தாந்த உண்மைகளை ஆங்கிலத்தில் மேல்நாட்டாருக்கும் பிறருக்கும் நன்ருக விளக்குவது. ஆங்கிலப் பிரசுராலய கர்த்தர்கள் இந்நூலை ஏற்றுத் தாங்களே அச்சிட்டுள்ளமை இதன் பெருமையை நன்கு காட்டும்.]

(11) ஆறுமுக நாவலர்

[நாவலர் சரித்திரத்தைச் சுருக்கமாக ஆங்கிலத்தில் இயம்புவது. நாவலர் பெருமையை தமிழ் நாடேயன்றி பிறநாடும் அறியச் செய்வது.]

(12) An outline of Sivagnabotham with a rejoinder to a Christian critic.

இச்சிறு நூல் யாழ்ப்பாணத்துச் சைவப் பிரகாச அச்சுக்கூடத்தினரால் 1951-ம் ஆண்டில் வெளியிடப்பட்டது. தருமபுர ஆதீனத்தம்பிரான் சுவாமிகள் ஒருவர் வேண்டுகோளின்படி ஆசிரியரால் எழுதப்பட்டது.

(13) அளவை நூல்

[இது சிதம்பரம் அண்ணாமலைச் சர்வகலாசாலையாரால் Intermediate வகுப்புப் பாடமாக நியமிக்கப் பட்டு அவர்களால் அச்சிடப்பட்டது.]

(14) Essentials of Logic

[இது Intermediate வகுப்பு மாணவருக்குத் துணைபுரியத்தக்க நூல். இதனைச் சென்னை Rochouse & Son 1952-ல் அச்சிட்டனர்.]

(15) The Glories of Saivaism.

இச்சிறு நூல் யாழ்ப்பாணம் சைவப் பிரகாச யந்திரசாலையில் 1954-ல் ஆசிரியது தம்பியாராகிய Dr. சிவப்பிரகாசரால் அச்சிடப்பட்டது. இது சைவ சமய மகிமையை ஆங்கிலத்தில் கூறுவதாகும். இதுவே ஆசிரியர் கடைசியாக எழுதிய நூல்.

இனி ஆசிரியருக்கும் எனக்கும் எப்படி நட்புரிமை யுண்டாயதென்பதை இங்கே குறிப்பிட விரும்புகின்றேன்:—

1918-ம் ஆண்டில் திருவருட்பயன் விளக்கவுரையை இவர்கள் அச்சிட்டனர். இவ்வெளியீட்டைப்பற்றி இந்து சாதன வாயிலாக அறிந்து ஒரு பிரதியை வரவழைத்துப் படித்து மகிழ்ச்சி அடைந்தேன். பிறகு சைவபோதம் முதற் புத்தகம், இரண்டாம் புத்தகங்களையும் வரவழைக்கலானேன். அம்மூன்றைப் பற்றியும் எனது மதிப்புரை யொன்றெழுதிச் சித்தாந்தப் பத்திரிகையில் வெளியிட்

இப்பெரியார் சிவபக்தியிற் சிறந்தவர். இவர் தினந்தோறும் காலையிலும் மாலையிலும் கோயில் வழிபாடு செய்யாமல் உணவு கொள்ளார். எப்போதும் சிவனடியே சிந்திக்கப்பெற்றவர். மறந்தும் புறந்தொழா மாண்பினர். வெள்ளிக்கிழமை தோறும் உபவாசமிருப்பவர். வைதிகசைவ சிகாமணியாய்த் துலங்கியவர். சைவ சித்தாந்த சாத்திரங்களையும் சிவாகமங்களையும் முறையாகப் படித்துத் தேர்ச்சியடைந்தவர்; அவற்றின்படி ஒழுகுபவர். நேர்மையிற் சிறந்தவர். கூர்மையான அறிவுடையவர். புகழ்ச்சியையும் பொருளையும் விரும்பாதவர். அவர் எழுதிய புத்தகங்களின் உரிமையையெல்லாம் சைவ பரிபாலனசபைக்கும், கொழும்பு விவேகானந்த சபையினருக்கும் அளித்துளார். சைவ சமயத்தின் உண்மைகளை ஆங்கிலத்தில் பரப்பிய மூன்று பேரறிஞர்களில் இவருமொருவராவர். மற்ற இருவர் நல்லசாமிப் பிள்ளையும், குகதாசர் - சபாரத்தின முதலியாருமாவர். இவருக்குப்பின் எவருமிலர் எனலாம். இப்பெரியார் சென்ற (விஜய ஆடி 30உ). 14—8—1953-ல் சிவபதமடைந்தனர் யாம் இவருக்குச் செய்ய வேண்டிய கடமை என்னெனின் அவர் குணங்களையும் செயல்களையும் பின்பற்றிச் சைவ சமயத்தை முறையாகப் பரப்புவதேயாம்.

"பொய்யன்பிலா அடித்தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே"

விஜய பங்குனி
உத்திரம்.

**சே. வெ. ஜம்புலிங்கம்.**

# சைவ சமய சாரம்

## 1. கடவுள்

*அண்டப் பகுதி னுண்டைப் பிறக்கம்*
*அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி*
*ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்*
*நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன*
*இன்னுழை கதிரின் துன்னணுப் புரையச்*
*சிறிய வாகப் பெரியோன்.*

—திருவண்டப்பகுதி.

ஆகாயத்தை இராக்காலத்திலே அண்ணாந்து பார்த்தால் அதிலே எண்ணில்லாத நட்சத்திரங்கள் மின்னி விளங்குவதைக் காணலாம். இந்த நட்சத்திரங்கள் வெகு தூரத்திலே இருத்தலாற் சிறியவைகளாகத் தோன்றுகின்றன. அவைகள் உள்ளபடி மிகப்பெரியவைகளேயாம். சூரியன் பூமியிலும் பதின்மூன்று லட்சம் மடங்கு பெரியது. எல்லா நட்சத்திரங்களும் சூரியனிலும் பெரியவைகளே. ஆதலால், இந்தப் பூமியையும், சூரியனையும், எண்ணில்லாத நட்சத்திரங்களையும் மாயையிலிருந்து உண்டாக்கிய கடவுளுடைய பெருமையை யார்தான் சொல்ல வல்லவர்!

இந்த அளவில்லாத பெருமையை உடைய கடவுள் அன்பையே வடிவமாக உடையவர்.

*"அன்புசிவம் இரண்டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாவ தாரு மறிந்திலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே."*

ஆதலால், அவர் நம்மிடத்திற் கொண்ட அன்பும் அளவில்லாததாகவே இருக்கும். பெற்ற தாயானவள் குழந்தையிடத்தே எவ்வளவு அன்புடையவளாய் இருக்கிருள். கடவுளுடைய அன்பு தாயினுடைய அன்பினும் கோடாநுகோடி மடங்கு அதிகமாய் இருக்குமல்லவா? தாயைக் காணும்போது குழந்தை எவ்வளவு ஆநந்தம் அடைகிறது. ஆதலால், தாயினும் பார்க்க அதிகமான அன்பையுடைய கடவுளை நினைக்கும் போதும், அவரைக் **கோயிலிலே** காணும்போதும் நாம் எல்லையில்லாத ஆநந்தம் அடைய வேண்டும்; நமது மனம் கரைந்து உருகுதல் வேண்டும்.

*மெய்தா னரும்பி விதிர்விதிர்த்*
*துன்விரை யார்கழற்கென்*
*கைதான் றலைவைத்துக் கண்ணீர்*
*ததும்பி வெதும்பியுள்ளம்*

*பொய்தான் றவிர்ந்துன்னைப் போற்றி*
*சயசய போற்றியென்னும்*
*கைதா னெகிழ விடேனுடை*
*யாயென்னைக் கண்டுகொள்ளே.*

தாய் தந்தையர் குழந்தைக்கு வேண்டிய ஊண் உடை முதலியவற்றை, அக்குழந்தை கேளாமலிருக்கவே கொடுத்து விடுகிறார்கள். குழந்தைக்கு வேண்டியவற்றுட் சிலவற்றை அவர்கள் அறிய மாட்டார்கள். அவற்றைக் குழந்தை அவர்களுக்குச் சொல்லியபின்பு அவர்கள் கொடுக்கிறார்கள். கடவுள் எல்லாம் அறிபவர் ஆதலால், நமக்கு வேண்டிய யாவற்றையும் அவர் தாமாகவே தருவர். நாம் அவரை ஒன்றுங் கேட்க வேண்டியதில்லை. அவரை வணங்குதலும், துதித்தலும், நினைத்தலும், பூசித்தலுமே நாம் செய்ய வேண்டியவை.

*"பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப்*
*பரிந்துநீ பாவியே னுடைய*
*ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி*
*உலப்பிலா ஆநந்த மாய*
*தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த*
*செல்வமே சிவபெரு மானே*
*யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்*
*எங்கெழுந் தருளுவ தினியே."*

இந்த உடம்பு நம்மோடு எப்போதும் இருப்பதன்று. ஒரு நாளைக்கு நாம் இதைவிட்டு

விலக வேண்டிவரும். அப்போது நமது தாய் தந்தையரும் சுற்றத்தவரும் நண்பரும் நம்மை விட்டுப் பிரிந்து விடுவார்கள். நமது பொருள் பண்டங்களும் தொடர்பற்றுப்போம். கடவுள் ஒருவரே எக்காலத்திலும் எல்லையில்லாத அன்பைச் சொரிந்துகொண்டு நம்மோடு துணையாய் நிற்கும் மெய்ப்பொருள்.

*"ஈன்றாளு மாயெனக் கெந்தையு*
*மாயுடன் தோன்றினராய்*
*மூன்றாய் உலகம் படைத்துகந்*
*தான்மனத் துள்ளிருக்க*
*ஏன்றான் இமையவர்க் கன்பன்*
*திருப்பா திரிப்புலியூர்த்*
*தோன்றாத் துணையாய் இருந்தனன்*
*தன்னடி யோங்களுக்கே."*

ஆதலால், நம்முடைய மனம் அவரையே நாடுதல் வேண்டும். நமது சீவனத்துக்கு வேண்டிய தொழில்களை நாம் செய்யும்போது நமது மனம் அவற்றிலே செல்லுமாயினும் அதன் நாட்டம் எப்போதும் கடவுளிடத்திலேயே இருத்தல் வேண்டும்.

*'நாடகத்தா லுன்னடியார்*
*போனடித்து நானடுவே*
*வீடகத்தே புகுந்திடுவான்*
*மிகப்பெரிதும் விரைகின்றேன்*

ஆடகச்சீர் மணிக்குன்றே
யிடையறா வன்புனக்கென்
ஊடகத்தே நின்றுருகத்
தந்தருளெம் முடையானே.'

—திருவாசகம்.

'இரவும் பகலும் துதிசெய் திருதாள்
பரவும் பரிசே பரிசின் றருள்வாய்
கரவுண் டெழுசூர் களையக் கதிர்போல்
விரவுஞ் சுடர்வேல் விடுசே வகனே.''

—கந்தரநுபூதி.

---

# 2. ஆன்மாக்கள்

ஆன்மாக்கள் என்றும் உள்ளவை. அவற்றின் அறிவை ஆணவம் என்ற ஒரு பொருள் இயல்பாகவே மறைத்துக்கொண்டிருக்கிறது. இந்த ஆணவ மறைப்பை நீக்கி நிறைவான மெய்யறிவெனப்படும் சிவஞானத்தைக் கொடுத்தற்காகவே கடவுள் ஆன்மாக்களுக்கு உடம்புகளைக் கொடுத்தருளுகிறார். இந்த உடம்புகள் புழு உடம்பு முதல் மனித உடம்பு ஈருகப் பல வகைப்படும்.

''புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்.''

என்று பாடியருளினர் மாணிக்கவாசகர். ஒரு ஆன்மாவுக்குக் கிடைக்கும் உடம்பானது அது அப்போது அனுபவிக்கவேண்டிய வினைகளுக்குத் தக்கதாய் இருக்கும். வினைப்பயனை அனுபவித்தால் ஆணவ மறைப்புக் குறையும். ஆதலால் ஒரு ஆன்மா எந்தப் பிறவியை எடுத்தாலும், அந்தப் பிறவியிலே அதனுடைய ஆணவ மறைப்பு சற்றே குறையும்; மெய்யறிவு சற்றே வளரும்.

ஆகவே, ஆன்மாக்களாகிய நம்முடைய பிரதானமான தொழில் இந்த ஆணவ மறைப்பை நீக்கிச் சிவஞானத்தைப் பெறுதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்தலேயாம். சிவஞானத்துக்குக் கடவுளுடைய **திருவடிகள்** என்றும் பெயர். இதனாலேதான், கடவுளுடைய திருவடிகளை அடைதலே நாம் பிறவி எடுப்பதன் பயன் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். அத்திருவடிகளைத் தருமாறு கடவுளை வேண்டுகிறார்கள்.

*'ஒருவனே போற்றி ஒப்பி*
*லப்பனே போற்றி வானோர்*
*குருவனே போற்றி யெங்கள்*
*கோமளக் கொழுந்து போற்றி*
*வருகவென் றென்னை நின்பால்*
*வாங்கிட வேண்டும் போற்றி*
*தருகநின் பாதம் போற்றி*
*தமியனேன் றனிமை தீர்த்தே.'*

என்று பாடியருளியதும் மாணிக்கவாசகசுவாமி களேயாம். உயிர்கள் யாவும் அத்திருவடிகளை அடைதற்காகவே யாத்திரை செய்கின்றன. கதிர்காமத்துக்கு வழிநடையாய் யாத்திரை செய்பவர்கள் காலையிலும் மாலையிலும் இயன்ற அளவு நடப்பார்கள்; நடுப்பகலிலும் இரவிலும் ஒரு இடத்திலே தங்கியிருந்து சமைத்துப் சாப் பிட்டுவிட்டு ஓய்வாய் இருப்பார்கள். தங்கியிருக் கும்போதும் சமைக்கும்போதும் அடிக்கடி ''கதிர்வேல்! கதிர்வேல்!!'' என்று அலறுவார் கள்; அவர்கள் என்ன தொழில் செய்தாலும், அவர்களுடைய மனம் இடையருது கதிர்காமத் தையனிடத்தே தான் செல்லும். அதுபோலக் கடவுளுடைய திருவடிகளை அடைவதற்கு யாத் திரை செய்பவர்களாகிய நாம் அந்த யாத்திரை யையே முழு நோக்கமாகவும், உண்ணுதலையும் உறங்குதலையும் அதற்குத் துணையாகவும் கொள் ளுதல் வேண்டும்.

கதிர்காம யாத்திரைகாரர் கூட்டம் கூட்ட மாகப் போதல் வழக்கம். ஒவ்வொரு கூட்டத் திலும் ஆண்களும் பெண்களும் பெரியாரும் சிறியாரும், கற்ருரும் கல்லாதாரும், செல்வரும் வறியவரும் உளர். ஆயினும் யாவரும் கதிர் காமத்து ஆண்டவனுடைய அடியார்கள் என்ற

கொள்கையை உடையவராய் அன்பும் அருளும் நிறைந்தவராய் யாத்திரை செய்வர். அது போலத் திருவடி யாத்திரைகாரராகிய நாம் எல்லோரும் ஒருவரோடொருவர் நீதியாயும் அன்பாயும் வாழுதல் வேண்டும்.

திருவடி யாத்திரையைப்பற்றி மாணிக்க வாசக சுவாமிகள் பாடியருளிய '**யாத்திரைப் பத்து**' என்னும் பதிகம் திருவாசகத்திலுள்ளது, அதிலுள்ள பாடல் ஒன்று வருமாறு :—

*'தாமே தமக்குச் சுற்றமுந்*
*தாமே தமக்கு விதிவகையும்*
*யாமா ரெமதார் பாசமார்*
*என்ன மாய மிவைபோகக்*
*கோமான் பண்டைத் தொண்டரொடு*
*மவன்றன் குறிப்பே குறிக்கொண்டு*
*போமா றமையின் பொய்நீக்கிப்*
*புயங்க னுள்வான் பொன்னடிக்கே.'*

---

## 3. கடவுள் வழிபாடு

**க**டவுளுடைய திருவடிகளை அடைதற் காகவே நாம் பிறவி எடுத்தோமாதலால், அத் திருவடிகளைச் சிந்தித்தலும், துதித்தலும், வணங்குதலுமே நமது முக்கியமான கடமை

யாகும். உடம்பு நயப்படுதற்கு உணவும், மனம் நயப்படுதற்குக் கல்வியும் வேண்டப்படுதல் போல ஆன்மா நயப்படுவதற்குக் கடவுள் வழி பாடு வேண்டப்படும், உடம்பும் மனமும் ஆன்மாவின் கருவிகள்; உடம்பு தொழில் செய்தற்கும், மனம் ஆராய்தற்கும் கருவியா யுள்ளவை. கருவிகளினும் பார்க்கக் கருவிகளை யுடையவன் மேலானவன். ஆதலால், உடம்பி னும் மனத்தினும் மேலானதே ஆன்மா. ஆகவே உடம்பை நயப்படுத்துதற்கு வேண்டிய உணவி னும், மனத்தை நயப்படுத்துதற்கு வேண்டிய கல்வியினும் மேலானது ஆன்மாவை நயப்படுத் துவதாகிய கடவுள் வழிபாடு. அன்றியும், இவைகள் ஆன்மாவுக்குக் கருவியாயிருத்தலால், இவற்றின் முக்கியமான தொழில் ஆன்மாவுக்கு வேண்டிய கடவுள் வழிபாட்டில் ஈடுபடுதலே யாம். 'திருக்கோயிலை வலம் வந்து சுவாமிக் குப் பூவைச் சாத்தித் தோத்திரம் செய்யாத உடம்பினுற் பயனில்லை' என்ருர் திருநாவுக்கரசு நாயனுர். 'கடவுளுடைய திருவடிகளைத் தொழு தற்குத் துணையாய் நில்லாத கல்வியினுற் பய னில்லை' என்ருர் திருவள்ளுவ நாயனுர்.

*"ஆக்கையாற் பயனென்—அரன்*
*கோயில் வலம்வந்து*
*பூக்கையாலட்டி போற்றி என்னுதவிவ்*
*வாக்கையாற் பயனென்."*

—திருநாவுக்கரசுநாயனுர்.

*"கற்றதனு லாயபயன் என்கொல் வாலறிவன்*
*நற்ருள் தொழாஅர் எனின்-"*

—திருவள்ளுவநாயஞர்

கடவுள் வழிபாட்டிற்கு உரிய நேரங்கள் காலையும் மாலையுமாம். இவ்வழிபாடு பலவாருகச் செய்யப்படுகின்றது. சிலர் தேவாரம். திருவாசகம் முதலிய அருட்பாக்களைப் பாடிக் கடவுளைத் தோத்திரம் செய்து தியானித்துச் சிந்தித்து வணங்குவர். வேறு சிலர் இவற்ருேடு திரு ஐந்தெழுத்தை ஓதுவர். சுப்பிரமணியர் தொண்டர் திருப்புகழ் முதலிய அருட்பாக்களையும் திரு ஆறெழுத்தையும் ஓதுவர். வேறு சிலர் சுப்பிரமணியர் முதலிய மூர்த்திகளுள் ஒன்றுக்குப் பூசை செய்வர். மற்றுஞ் சிலர் சிவலிங்க பூசை செய்வர். இன்னுஞ் சிலர் கோயிலுக்குச் சென்று சுவாமி தரிசனம் செய்து வழிபடுவர்.

கடவுளை நாம் தரிசிக்கும்போதும் பூசிக்கும்போதும் "எங்கும் வியாபகமாயுள்ள இறைவனே! சிறியேனுடைய வழிபாட்டிற்காக இங்கு எழுந்தருளியிருக்கும் இப்பெருங் கருணையை நான் எவ்வாறுதான் துதிப்பேன்!! உன்னுடைய திருமுன்னிலையில் நின்று உன்னுடைய கருணையைப் பருகும்பாக்கியம் எனக்குக் கிடைத்ததே! உன்னை நான் மறந்து விடுகிறேனே!!!"

*பனைக்கை மும்மத வேழ முரித்தவன்*
*நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்*
*அனைத்தும் வேடமா மம்பலக் கூத்தனைத்*
*தினைத்த னைப்போ தும்மறந் துய்வனே.*

*புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா*
*உன்னடி யென்மனத்தே*
*வழுவா திருக்க வரந்தர*
*வேண்டுமிவ் வையகத்தே*
*தொழுவார்க் கிரங்கி யிருந்தருள்*
*செய்பா திரிப்புலியூர்ச்*
*செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை*
*மேல்வைத்த தீவண்ணனே.*

—தேவாரம்.

என்று அந்த அந்த நேரம் மனதிலே வருவன வற்றைச் சொல்லி ஆனந்திப்போம். கடவுள் வழிபாடு இவ்வளவோடு நில்லாமல் நமது பிற செயல்களிலும் செறிந்திருக்கின்றது. நித்திரை விட்டெழும்பும் போது 'சிவ சிவ' என்று சொல்லி எழுந்திருக்கிறோம். உடனே கை வாய் கழுவி 'சிவ சிவ' என்று சொல்லித் திருநீறு பூசுகிறோம். குளிக்கும்போது கடவுளைச் சிந்திக் கிறோம். சாப்பிடும்போது கடவுளுக்கு நிவேதித் துச் சாப்பிடுகிறோம். சாப்பாடு முடிந்தவுடனே 'சிவசிவ' என்று சொல்லித் திருநீறு பூசுகிறோம். வெளியே போகும்போதும் அப்படியே செய்கி றோம். நித்திரைக்குப் போகும்போது சிவ பிரானைத் தோத்திரித்து திரு ஐந்தெழுத்தை ஓதிக்கொண்டு உறங்குகிறோம்.

கடவுள் வழிபாடு நமது ஒழுக்கத்தையும் சீர்படுத்தக் கூடியது. தீய ஆசைகளேனும் தீய எண்ணங்களேனும் எழும்போது சிவ சிந்தனை செய்தால், அச்சிந்தனை இவற்றைக் கருக்கி மீள விடாமல் அழித்து விடும். அது மனத்தைத் தூயதாக்கி இறைவன் எழுந்தருளியிருத்தற்கு த்குதிவாய்ந்த இடமாக்கும். இவ்வுண்மையை

*'தேடிக் கண்டுகொண்டேன்—திரு*
*மாலொடு நான்முகனுந்*
*தேடித் தேடொணாத் தேவனை யென்னுளே*
*தேடிக் கண்டுகொண்டேன்.*

*நாடி நாராயண னுன்முக னென்றிவர்*
*தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ*
*மாட மாளிகை சூழ்தில்லை யம்பலத்*
*தாடி பாதமென் னெஞ்சு ளிருக்கவே.'*

என்னும் திருநாவுக்கரசு நாயனுர் திருவாக்கு களிற் காண்க.

நாம் எதை அதிகமாகச் சிந்திக்கிருேமோ அதனிடத்தில் நமக்கு உறுதியான பற்று உண்டாகின்றது. கள்ளை அதிகமாக நினைக்கிறவனுக்குக் கள்ளுண்ணல் ஒரு பைத்தியமாகின்றது. அறிவிலே அதிகமான விசாரமுள்ளவனுடைய மனம் கல்வியிலன்றி வேருென்றிலும் செல்லாது. சங்கீதத்தை அதிகமாகச் சிந்திப்பவன் சங்கீத மயமாகின்ருன். கடவுளிடத்திலே சிந்தனையைச் செலுத்துபவன் கடவுளின் அருள்மய மாகின்ருன்.

*"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா*
*நித்தலுமெம் பிரானுடைய கோயில்புக்குப்*
*புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்*
*பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித்*
*தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடித்*
*சங்கரா சயபோற்றி போற்றிஎன்றும்*
*அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீயென்றும்*
*ஆரூரா என்றென்றே அலறுநில்லே."*

—தேவாரம்

---

## 4. நல்வினை தீவினைகள்

கடவுள் எல்லா உயிர்களுக்கும் பரம பிதா, ஆதலால் மற்றைய உயிர்கள் யாவும் நமக்குச் சகோதரர்கள்; நமது அன்புக்கும் ஆதரவுக்கும் உரிமை உடையவர்கள். நாம் இதை முற்றாக மறந்து, சிலரை வெறுக்கின்றோம்; வேறு சிலரைப் பகைக்கின்றோம்; சில உயிர்களுக்குத் துன்பம் செய்கின்றோம்; சிலவற்றைக் கெடுக்கின்றோம். இப்படி முறைகேடாய் நாம் நடப்பதற்குக் காரணம் நமது ஆசைகள். ஆசைகள் உண்டாவதற்குக் காரணமாயுள்ளது நம்மை மயக்கிக் கொண்டிருப்பதாகிய ஆணவம்.

ஆசைகளை நாம் எல்லைப்படுத்தி வைத்துக் கொள்வோமாயின், மற்றைய உயிர்களைச் சகோ

தரர்களாகப் பாவித்தல் இலகுவாய்க் கைகூடும். நமக்குப் பொருளிலே ஆசை உண்டு. இந்த ஆசைக்கு எல்லையாய் இருக்கவேண்டியது நாம் நன்முயற்சியாற் சம்பாதிக்கும் பொருளேயாம். அந்த எல்லையைக் கடந்து பிறர் பொருளிலே இந்த ஆசை செல்லுதல் தகாது. நமக்கு உணவிலே ஆசை உண்டு. இந்த ஆசைக்கு எல்லையாயுள்ளது பிற உயிர்களை வருத்தாமல் வரும் உணவுகளாம். அவையாவன:—அரிசி முதலிய தானியங்களும், காய், கனி, கிழங்கு முதலியவைகளுமாம். இந்த ஆசையானது மீன், விலங்கு, பட்சி முதலியவற்றின் ஊனிலும், இவற்றுட் சிலவற்றின் கருவாயுள்ள முட்டைகளிலும் செல்லலாகாது. நம்முடைய கலவியாசை விவாக எல்லையுள் அடங்கி நிற்கவேண்டியது. அப்பாற் செல்லுதல் தகாது.

ஆசையானது எல்லையைக் கடக்கும்போது நாம் செய்யும் செயல் தீவினையாகும். தீவினை செய்பவர்களுக்குக் கடவுள் இப்பிறவியிலேனும் மறு பிறவியிலேனும் துன்பமான வாழ்க்கையைக் கொடுத்தருளுவார். இப்பிறவியிலே குருடாய்ச் செவிடாய் நொண்டியாய்ப் பிறக்கிறவர்களும், பிறந்த பின்பு வறுமையாலும் நோயினாலும் அறிவின்மையாலும் வருந்துகிறவர்களும் முற்பிறவியிலே தீவினை செய்தவர்களாம். இவர்

கள் வருந்துவதைக் காணும்போதும் நாம் தீவினை செய்ய அஞ்சுகின்றோம்.

வலிய ஆசைகள் எல்லையைக் கடக்கும் போது அவைகளை அடக்குதல் அரிது. ஆதலால், அவைகள் எல்லையைக் கடக்க மாட்டாத விதமாக நம்மைப் பழக்கி வருதல் வேண்டும். அப்படியான பழக்கத்தை நாம் கைக்கொண்டால் நமது மனம் தீய வழியிலேயே செல்ல மாட்டாது. இப்பழக்கத்தைச் சிறுவயதிலேயே மேற்கொள்ளுதல் எளிது. சின்ன வயதிலேயே சத்தியம், நேர்மை, மன அடக்கம், மனஉறுதி, மனத்திருப்தியாகிய இவற்றைப் பழக்கிக்கொண்டால், இறக்கும் வரைக்கும் இவைகள் நிலைத்திருக்கத் தக்கவை. அறப்பற்றும், பிற உயிர்களில் இரக்கமும், யாவரும் கடவுளுடைய குழந்தைகள்என்ற எண்ணமும் உறுதிப்பட்டால் ஆசைகள் தாமாகவே அடங்கி நிற்கும்; அப்படி அடங்கி நின்றால் நாம் தீவினைகளைச் செய்ய மாட்டோம்.

நல்லவர்களுடைய சரித்திரங்களைப் படித்தலும் கேட்டலும் அவர்களை நயத்தலும் தாய் தந்தை ஆசிரியர் முதலியோருக்குப் பணிந்து நடத்தலும், அவர்களுடைய அன்பை விரும்புதலும், தீவினை செய்யாமைக்குத் துணையானவைகளாம். எங்கும் நிறைந்திருப்பவரும் எல்

லாம் அறிபவரும் நமது நெஞ்சிலே எப்போதும் வீற்றிருப்பவருமாகிய சிவபிரானை வணங்கிப் பணிந்து நடத்தலே தீவினையினின்றும் நீங்குதற்குச் சிறந்த சாதனமாம்.

அறிவாளிகள் ஆசைகளை இலகுவாகக் களைந்துவிடுவார்கள். நமது உடம்பும் மற்றைய பொருள்களும் இந்த உலகமும் மாயையால் ஆக்கப்பட்டவை; மாயையையும் கைவிட்டால் தான் நாம் கடவுளுடைய திருவடிகளை அடையலாம்; ஆதலால், மாயை நம்மால் விலக்கப்பட வேண்டியபொருள். நாம் ஆசைப்படும் பொருள்களெல்லாம் மாயையிலிருந்து தோன்றியவை; ஆதலால் இப்பொருள்களிலே ஆசை கொள்ளுதல் தவருகும். அன்றியும், ஆன்மாவானது மாயையிலும் பார்க்கக் கோடாநுகோடி மடங்கு மேலான பொருள்; ஆதலால் அது மாயைப் பொருள்களாகிய பொன்னுக்கும் புலத்துக்கும், பூணுக்கும் புலாலுக்கும், பேருக்கும் பெருமைக்கும் அடிமையாதல் தகாது என்று கருதி அறிவாளிகள் ஆசைகளை அறுப்பார்கள்.

இனி நல்வினையாவது யாதெனில்:—நாம் கடவுளிடத்திற்கொண்ட அன்பினுலும் மற்றைய உயிர்களிடத்திற் கொண்ட இரக்கத்தினுலும் உந்தப்பட்டு நாம் செய்யும் நற்செயல்களாம். அவையாவன:—**கடவுள் வழிபாடும்,**

இன்சொல்லும், வறியவர்களது பசி நோய்களைத் தீர்த்தலும், பிறர் செய்யும் பிழைகளைப் பொறுத்தலும், நற்போதனை செய்தலும், இவை போல்வனவுமாம், நல்வினை செய்பவர்களைக் கடவுள் அப்பிறவியிலும் மறு பிறவியிலும் சுகமாக வாழவைப்பார். அதனால் அவர்களுக்கு நல்வினையிலுள்ள பற்று மேலும் மேலும் வளர்ந்து ஓங்கும்; ஆணவ மறைப்பு குறைந்து குறைந்து போகும்; மெய்யறிவு ஏறி ஏறி வரும்.

தீவினை செய்பவர்களுக்குக் கடவுள் துன்பத்தை ஊட்டியருளுவர். அத்துன்பத்தினாலே அவர்களுக்குத் தீவினையில் வெறுப்பும் நல்வினையிலே விருப்பும் உண்டாகும்; அதனால், ஆணவ மறைப்பு குறையும்; மெய்யறிவு வளரும்.

*"கொல்லாமற் கொன்றதைத் தின்னமற்*
*குத்திரம் கோள்களவு*
*கல்லாமற் கைதவ ரோடிணங்*
*காமற் கனவிலும்பொய்*
*சொல்லாமற் சொற்களைக் கேளாமல்*
*தோகையர் மாயையிலே*
*செல்லாமற் செல்வந் தருவாய்*
*சிதம்பர தேசிகனே."*

—பட்டினத்தார்.

---

# 5. சைவ வாழ்க்கை

**நாம்** விரும்பியபடி ஒன்றைப் பெறும் போது நம் மனத்திலே இன்பம் உண்டாகின்றது. நாம் மாம்பழம் தின்ன விரும்பும்போது அது கிடைக்குமாயின், இன்புறுகின்ருேம். கள் ளுணவை விரும்புகிறவன், அதைப்பருகும்போது இன்புறுகின்ருன். அன்றியும் நாம் விரும்ப மாட் டாத ஒன்று நம்மைச் சேராவிட்டாலும் நாம் இன்புறுகின்ருேம். களவு செய்தவன் அகப் படாமல் தப்பி விட்டாளுயின் மிகவும் சந்தோ ஷப் படுகிருன்.

இப்படியின்றி, நாம் விரும்பிய ஒன்று கிடையாவிட்டாலும், விரும்பாதது வந்து சேர்ந் தாலும் துன்பம் உண்டாகின்றது. எனக்காயி னும், என்னேச் சேர்ந்தவர்க்காயினும், என்னு டைய பொருளுக்காயினும் இடர் நேர்ந்தால் துக்கம் உண்டாகின்றது. யாராயினும் இடர் செய்தால் அவரிடத்திலே கோபம் உண்டாகின் றது. ஏதாயினும் இடர் வரப்போகிறதென்று கண்டால் அச்சம் உண்டாகின்றது.

சைவ வாழ்க்கையிலே துன்பத்துக்காயி னும், துக்கத்துக்காயினும், கோபத்துக்காயி

னும், அச்சத்துக்காயினும் இடம் வராது. பச்சைக் கண்ணுடியை அணிந்துகொண்டு எதைப் பார்த்தாலும் அது பச்சையாகவே தோன்றும். வெண்மையான பாலும், செம்மையான இரத்தமும், நீலமான ஆகாயமும், கரியதாகிய காகமும் பச்சையாகவே தோன்றும். அதுபோலச் சைவ மாகிய கண்ணுடியாற் பார்த்தால், யாவும் உவப்பானவைகளாகவே தோன்றும். நான் விரும்பிய பொருள் கிடையாவிடில் துன்பமில்லை; எனது கப்பல் ஆழ்ந்து போனுல் துக்கமில்லை; என் குழந்தை இறந்துபோம் என்று அஞ்சுவதில்லை; என் பயிரை அழிப்பவனைத் தடுத்தலும் கண்டித்தலுமேயன்றிக் கோபித்தலில்லை.

சைவ சமயத்தின்படி நாம் ஆணவமென்னும் வியாதியினுலே பீடிக்கப்பட்டிருக்கிறோம். இந்த வியாதியைத் தீர்க்கும் வைத்தியர் சிவபெருமான்; ஆதலால் அவருக்கு "**வைத்திய நாதன்**" என்று பெயர். நோயாளி தனக்குப் பொருந்தாத உணவுகளை விரும்புதல் உண்டு, ஆயினும் வைத்தியன் அந்த உணவுகளைக் கொடுக்க மாட்டான். அதுபோல, நமக்கு ஆகாத பொருள்களை நாம் விரும்புதல் உண்டு; வைத்திய நாதராகிய கடவுள் அவற்றை நமக்கு அருளமாட்டார். ஆதலால் நாம் விரும்பிய பொருள் நமக்குக் கிடையாவிடின், அது நமக்கு

ஆகாததென்று உணர்ந்து, அது கிடையாமற் போனதைப்பற்றி நாம் சந்தோஷப்படல் வேண்டும். நோயாளி விரும்பமாட்டாத பல வற்றை வைத்தியன் அவனுக்குச் செய்கிருன்; ஆமணக்கெண்ணெய்போன்ற கசப்பான வற்றை உண்ணச் செய்கிருன்; பெரிய கொப் புளத்தைக் கத்தியினுலே கீறி வேதனையை ஆக்கு கிருன். அதுபோல, சிவபிராணுகிய வைத்திய நாதர் நாம் விரும்ப மாட்டாதவற்றை நமக்குச் சேர்த்தலும், கொடிய வேதனைகளை ஆக்குதலும், நமது ஆணவமாகிய நோயை நீக்கி நம்மைச் சுகமாக வாழும்படி வைத்தற்கேயாம். ஆதலால், நம் முயற்சிகளைக் கடந்து, நாம் வெறுப்பவைகள் நம்மை அடைந்தாலும், நாம் வேதனைகளில் அகப்பட்டாலும், அவைகள் நமது நன்மைக் காகக் கடவுளால் அருளப்பட்டவை என்பதை உணர்ந்து அவைகளைப்பற்றி இன்புறுதலே தக்கதாம். எனது கப்பல் ஆழ்ந்து போனதும், குழந்தை இறந்துபோனதும் நன்மையானவை களே. அவைகள் எனக்கு எப்படி நன்மை யாகும் என்பதை நாம் அறியவேண்டியதில்லை. '**யாவும் அவருடைய செயலே; அவர் செய்வ தெல்லாம் நன்மையே**' என்ற நம்பிக்கை உறுதியாயிருந்தால் அப்பர் சுவாமிகள் பாடி யருளியபடி,

"நாமார்க்குங் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பமில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரனற் சங்கவெண் குழையோர்காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே."

"சுண்ணவெண் சந்தனச் சாந்தும்
சுடர்திங்கட் சூளாமணியும்
வண்ண உரிவை உடையும்
வளரும் பவள நிறமும்
அண்ண லரண்முரண் ஏறும்
அகலம் வளாய அரவும்
திண்ணன் கெடிலப் புனலும்
உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை."

—தேவாரம்.

என்றும் எப்போதும் ஆநந்தமாய் வாழலாம். துக்கம், கோபம், அச்சம் ஆகிய மூன்றும் உடலுக்கே தீமையானவை. என்னுடைய கப்பல் ஆழ்ந்து போனால், பெருமுயற்சி செய்து பொருளைத்தேடி நட்டத்தைத் தீர்த்தலும், எனக்கு யாராவது இடர்செய்ய வரும்போது கோபம் கொள்ளுதலின்றி அவனைத் தடுத்தலும் குழந்தையானது கொடிய நோயின் வாயில்

அகப்பட்டால் அஞ்சுதலின்றி நல்ல வைத்தியம் செய்தலும், அது இறந்துபோனால் 'பிறந்தவர் இறக்கை திண்ணம் என்பதைக் கண்டு மனங் கலங்காதிருத்தலும் சைவர்க ளல்லாதாரும் செய்யத் தக்கவைகளாம்.

---

## 6. சைவ ஒழுக்கங்கள்

1. **சைச**வ ஒழுக்கங்களுள் இன்றியமை யாதது திருநீறு அணிதல். அதை அணியும் போது சிவபிரானை நினைத்தலும் திருவைந் தெழுத்தை உச்சரித்தலும் அவசியமானவை.

*"கருவாய்க் கிடந்துன் கழலே*
*நினையுங் கருத்துடையேன்*
*உருவாய்த் தெரிந்துன்ற னமம்*
*பயின்றே னுனதருளால்*
*திருவாய்ப் பொலியச் சிவாய*
*நமவென்று நீறணிந்தேன்*
*தருவாய் சிவகதி நீபா*
*திரிப்புலி யூரரனே."* —தேவாரம்.

2. திருவைந்தெழுத்தை ஆறுதலாயும் அமைதியாகவும் அன்போடு ஒவ்வொருநாளும் ஓதுதல்.

*"காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி*
*ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது*
*வேத நான்கினும் மெய்ப்பொரு ளாவது*
*நாதன் நாமம் நமச்சி வாயவே.*

—தேவாரம்.

3. தேவாரம் அல்லது திருவாசகம் ஒவ்வொருநாளும் ஓதுதல்; திருவாசகப் புத்தகம் ஒன்று வீட்டில் வைத்துக்கொள்ளுதல்.

4. சிவபெருமான், உமாதேவியார், விநாயகர், வைரவர், வீரபத்திரர், சுப்பிரமணியர் ஆகிய மூர்த்திகளுள் ஒன்றிலே விசேஷப்பற்று வைத்து நாள்தோறும் தியானித்துத் தோத்திரம் சொல்லி வணங்குதல்; சிவத்தியானத்துக்கு நடராச வடிவம் பொருத்தமானது.

*"தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்*
*சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்*
*ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோத முத்தி*
*நான்ற மலர்ப்பதத்தே நாடு."*

—**உண்மை விளக்கம்.**

அதிலுள்ள ஒவ்வொன்றும் அரிய உண்மைகளை விளக்கி, நம்மை நல்வழியிற்செலுத்தத் தக்கது. ஒரு திருக்கரத்திலேயுள்ள துடியானது படைத்தலாகிய தொழிலைக் குறிக்கின்றது. கடவுள் நம்மைப் படைத்தது நாம் மெய்ப்பொருளாகிய அவரை அடைந்து பேரானந்தத்தைப் பெறுதற்காக என்பதை அது காட்டத்தக்கது. ஆதலால் அதைக் காணும்போது,



"உற்றாரை யான்வேண்டே னூர்வேண்டேன்
பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவு
மினியமையுங்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன்
குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக
வேண்டுவனே."

—திருவாசகம்.

என்று எண்ணலாம்.

அவருடைய வேருெரு திருக்கரம் அபய கரம் எனப்படும். அது "நாம் உன்னேக் காப் போம்; ஒன்றுக்கும் பயப்படாதே" என்னும் குறிப்புடையது.

"மண்பா தலம்புக்கு மால்கடல்
மூடிமற் றேழுலகும்
விண்பால் திசைகெட் டிருசுடர்
வீழினு மஞ்சல்நெஞ்சே
திண்பா னமக்கொன் றுகண்டோம்
திருப்பா திரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட்
சுடரான் கழலிணையே. **தேவாரம்.**

என்னும் மனவுறுதியை ஆக்கத்தக்கது. திருவடிகளுள் ஒன்று முயலகனை மிதித்து ஆணவத்தை நசித்தலைக் குறிக்கும். அதை நாம் காணும்போது அவருடைய திருவடித் துணையைக்கொண்டு ஆணவத்தாலுண்டாகும் ஆசைகளை அடக்கவேண்டும் என்னும் விருப்பம் உண்டாகும். மற்றத்திருவடி அவர் நம்மைத் தம்மோடு சேர்த்துத் தம்மைப்போல் ஆக்குவார் என்பதைக் குறிக்கும். இது :—

"புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்
புயங்கன் தாளே புந்திவைத்திட்
டிகழ்மின் எல்லா அல்லலையு
மினியோ ரிடையூ றடையாமே
திகழுஞ் சீரார் சிவபுரத்துச்
சென் று சிவன்றாள் வணங்கிநாம்
நிகழு மடியார் முன்சென் று
நெஞ்ச முருகி நிற்போமே."

—**திருவாசகம்.**

என்னும் மனப்பான்மையை ஆக்கத்தக்கது.

5. சிவனடியார்களது திருநாட்களைக் கொண்டாடி அவர்களுடைய திருச்சரித்திரங்களைச் சொல்லி அல்லது கேட்டு அவர்களை வழிபடல்.

"தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கும் மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத இயற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே." –தேவாரம்.

6. நாள்தோறும் அல்லது வாரந்தோறும் கோயிலுக்குப் போதல்.

7. சைவ சமய முறைப்படி எப்போதும் நடக்கமாட்டாதவர்கள் வாரத்திற்கொரு முறையேனும், பக்கத்திற்கொரு முறையேனும், மாசத்திற்கொரு முறையேனும் முறைப்படி தவறாது நடத்தல். இப்படி நடத்தல் விரத நாட்களிற் பொருந்தும். மாசி மாதத்தில் வரும் சிவராத்திரி விரதம் சைவர் யாவரும் அனுட்டிக்கத் தக்கது.

8. நாம் ஒருவரைக் காணும்போது அவர் சிவபிரானது திருவடிகளைச் சேருதற்கு யாத்திரை செய்பவர் என்ற எண்ணமே நமது மனத்திலே முதல் உண்டாதல். அவர் நம்மிடம் வந்த தொழிற்றொடர்பு இரண்டாவதாக எண்ணத் தக்கது.

---

# 7. சைவத்தின் மேன்மை

1. எல்லா ஆன்மாக்களும் மோட்சத்தைப் பெறுமென்று சொல்லுவது சைவ சமயம் மாத்திரமேயாம்.

உமாபதி சிவம் உயிர்களை வகுக்கும்போது (1) இதுவரையில் மோட்சத்தைப் பெற்றவர்கள் (2) இனிமேல் மோட்சத்தைப் பெறுவோர்கள் என இரண்டாகப் பிரிக்கின்றூர். ''துறந்தோர் துறப்போர்'' என்பது அவருடைய திருவாக்கு. மற்றைய சமயத்தவர்கள் தங்கள் தங்கள் சமயத் தவர்களே ஈடேறுவார்கள் என்றும், வேறு சமயத்தவர்கள் நித்திய நரகத்தை அடைவார்கள் என்றும் சொல்லுகிறூர்கள்,

2. ஒரு பள்ளிக்கூடத்தை ஆக்குபவர் மாணுக்கர்களது அறிவுக்குத் தக்கதாக ஒன்றுக் கொன்று மேற்பட்ட பல வகுப்புகளை வைப்பது போல, கடவுள் ஆன்மாக்களது நிலைக்குத் தக்க தாக ஒன்றுக்கொன்று மேற்பட்ட பலசமயங்களை ஆக்கினுர் என்று சொல்லுவது சைவ சமயம் மாத்திரமேயாம். ''அறுவகை நெறிகளும் பிறவுமாக்கிய இறைவி''என்றூர் கச்சியப்பசிவம். 'அறுவகை நெறி' என்றது அறுவகைச் சமயம்; இவை நான்கு வகைப்படும்.

கீழ் வகுப்பாகிய அறுவகைச் சமயங்கள் சமண சமயம் முதலியவை. இவற்றுட் பல கடவுள் உண்டென்று சொல்லுவதில்லை. மேற்பட்ட அறுவகைச் சமயங்கள் ஏகான்மவாதம் முதலியவை. இவற்றுட்பல ஆன்மாவின் வேருகக் கடவுள் இல்லை என்று கூறும்.

இவற்றுக்கு மேற்பட்ட அறுவகைச் சமயங்கள் சாக்தம் முதலியவை. இவைகள் கூறும் கடவுளின் இலக்கணம் நிறைவானதன்று. இவற்றுக்கு மேற்பட்ட அறுவகைச்சமயங்கள் சிவசமவாதம் முதலியவை. இவற்றுக்கும் சைவத்திற்கும் வேறுபாடு அற்பமானது. இவற்றுக்கு எல்லாம் மேற்பட்டது சைவசமயமாம்.

3. மற்றைய சமயத்தவர்கள் தங்கள் தங்கள் சமயமே கடவுளால் ஆக்கப்பட்டதென்றும் ஏனைய சமயங்கள் கெட்ட சமயங்கள் என்றும் சொல்லுவார்கள்.

எந்தச் சமயத்தவரும் தமது சமயக்கடவுளை வழிபடும்போது அவ்வழிபாட்டைக் கடவுள் ஏற்று அருள்செய்வாரென்று சொல்லுவது சைவசமயம் மாத்திரமே.

*"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி
ஆங்கே மாதொருபாக னார்தாம் வருவர்."*

என்றார் அருணந்தி சிவம்.

4. மோட்சம் அடைதற்குச் சாதனமாகச் சமய அனுட்டானத்தைப் படிப்படியாக நிரைப் படுத்தியுள்ளது சைவ சமயம் மாத்திரமேயாம்.

சர்வகலா சாலைகளிலே இளம்பட்டவகுப்புகள் (graduate course) முதுப்பட்ட வகுப்புகள் (post-graduate course) என இரண்டு பெரியபடிகள் இருப்பதுபோலச் சைவசமயத்திலே உபாய மார்க்கம், உண்மை மார்க்கம் என இரண்டு பெரும்படிகள் உண்டு,

உபாய மார்க்கமாவது உலகப்பற்ளேடு செய்யும் சைவ அனுட்டானங்கள், நம்மைப் போன்றவர்கள் சைவசமய அனுட்டானங்களைச் செய்வாராயின் அவர்கள் உபாய மார்க்கத்தவராவர். உண்மை மார்க்கமாவது உலகப்பற்றுச் சிறிதுமின்றிச் செய்யப்படும் சைவ அனுட்டானங்கள். தாயுமானவர் முதலியோர் உண்மை மார்க்கத்தவர். இளம்பட்ட வகுப்புகள் முதலாண்டு வகுப்பு முதல் நான்காமாண்டு வகுப்பு வரையும் நாலுபடிகளாதல்போல; உபாயமார்க்கமானது உபாயச்சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாயஞானமென நான்கு படிகளையுடையது. முதுப்பட்டப் படிப்பிலே பலபடிகள் இருத்தல் போல (M. Sc., Ph. D., D. Sc.) உண்மை மார்க்கத்திலே உண்மைச் சரியை, உண்மைக் கிரியை, உண்மையோகம் என மூன்று படிகள்

உள. முதுப்பட்டப் படிப்பில் உந்நத நிலையடைந்தோர் இராசசபை அங்கத்தவராதல் போல (F. R. S.) உண்மை மார்க்கத்தில் உந்நத நிலையடைந்தோர் உண்மைஞானமாகிய உந்நத படியை அடைவர்.

இவற்றுள் **சரியையாவது:**—சிவாலயத் தொண்டு செய்தலும், விநாயகர் முதலிய உருவத் திருமேனிகளுள் ஒன்றுக்குப் பூஜை செய்தலுமாம். **கிரியையாவது:**—சிவலிங்கபூஜைசெய்தல். **யோகமாவது:**—சிவத்தியானம். **ஞானமாவது:**— ஞானநூல்களை ஞானாசாரியரிடம் கேட்டு அறிந்து சிவஞானத்தைப் பெறுதல்.

*..........."சங்கரனை யடையும்*
*நன் மார்க்கம்நா லு அவைதாம் ஞானயோகநற்*
*கிரியா சரியைஎன நவிற்றுவதுஞ் செய்வர்."*

என்றார் அருணந்தி சிவம்.

மற்றைய சமயங்கள் இவ்வாறான படிகளொன்றுமின்றி எளிதிலே மோட்சத்தைத் தருவோம் என்கின்றன. அப்படியாயின் அவர்களுடைய மோட்சம் என்ன பெறும்!

**5.** எல்லா விதமான தீவினைகளையும் விலக்குவது சைவ சமயம் மாத்திரமேயாம். ஏனைய தீவினைகளோடு கள்ளுண்ணல், புலாலுண்ணல், கொலையாகிய மூன்றையும் விலக்குவது சைவ சமயமே.

புலாலுண்ணலைப் புத்த சமயம் விலக்க வில்லை. புலாலுண்ணலையேனும் கொலையையே னும் இஸ்லாம் சமயம் விலக்கவில்லை; புலா லுண்ணலையேனும், கள்ளுண்ணலையேனும், கொலையையேனும் கிறிஸ்து சமயம் விலக்க வில்லை.

6. ஆன்மாக்கள் ஆணவமென்னும் வியாதி யினாற் பீடிக்கப்பட்ட நோயாளிகள் என்றும், அவைகள் செய்யும் பிழைகள் யாவும் அந்த நோயினால் வருவன என்றும் அவைகள் இயல் பாக நல்லவை என்றும், கடவுள் அந்த நோயைத் தீர்க்கும் வைத்தியநாதர் என்றும் அவர் ஆன்மாக்களுக்கு ஊட்டும் இன்ப துன் பங்கள் அந்நோயைத் தீர்க்கும் மருந்துகள் என் றும் சொல்லுவது சைவ சமயம் ஒன்றேயாம்.

*"அருளினால் உரைத்த நூலின்*
*வழிவரா ததன்மஞ் செய்யின்*
*இருளுலா நிரயத் துன்பத்*
*திட்டிரும் பாவம் தீர்ப்பன்*
*பொருளுலாம் சுவர்க்க மாதி*
*போகத்தாற் புணியம் தீர்ப்பன்*
*மருளுலாம் மலங்கள் தீர்ப்பன்*
*மருந்திவை வைத்திய நாதன்."*

என்றார் அருணந்தி சிவம்.

மற்றையசமயங்கள் மனிதர்கள் இயல்பாகக் கெட்டவர்கள் என்றும், கடவுள் அவர்கள் செய்யும் குற்றத்துக்காக அவர்களைத் தண்டிக்கும் நீதிபதி என்றும் கூறும்.

7. புறச்சமயத்தவரை வலிந்து இருக்காத்து சைவசமயம் மாத்திரமேயாம். மற்றைய சமயத்தவர்கள் ஏனைய சமயத்தவர்களைத் தங்கள் சமயத்துக்கு இழுப்பதே தமது பெரிய முயற்சியாகக் கொள்வார்கள்.

'மனிதர்காள்! இங்கேவம் ஒன்று சொல்லுகேன்;
கனிதந்தாற் கனி உண்ணவும் வல்லிரே?
புனிதன் பொற்கழ லீசன் எனுங்கனி
இனிது சாலவும் ஏசற் றவர்கட்கே'

—திருநாவுக்கரசு நாயனார்.

மழை வழங்குக மன்னவ னேங்குக
பிழையில் பல்வள னெல்லாம் பிறங்குக
தழைக வஞ்செழுத் தோசை தரையெலாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே.

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிராப்பள்ளி ஜில்லா, பிக்ஷாண்டார் கோயில் பண்ணையார், ஸ்ரீமான்-இராசகோபால பிள்ளையவர்களின் வேறு பிரசுரங்கள் :—

1. தென்னிந்திய வேளாண்மை (விவசாயபாட புத்தகம்) முதற்பாகம் 1—8
 ,, இரண்டாம் பாகம் 1—0
2. திருவாரூர்க் கமலாம்பிகை அம்மையார் பிரபந்தங்கள் 1–12
3. அஜபா கல்பம் (சம்ஸ்கிருத மூலமும் தமிழ் உரையும்) 0–12
4. தியாகராஜ தத்துவ விளக்கம் 1—8
5. ஸ்ரீதியாகராஜலீலை (முதற்பாகம்) 2—0
6. ,, (இரண்டாம் பாகம்) 3—0
7. விநாயகர் மஞ்சரி 0—2
8. முருக மஞ்சரி 0—6

---

*இந்நூல்கள் நாவலர் அச்சகத்திலும் கிடைக்கும்.*

   

நால்வர் பொற்றாளெம் முயிர்த்துணையே.

# யாழ்ப்பாண
# வைபவமாலை



முதலியார்
குல. சபாநாதன்

உ

மாதகல்

## மயில்வாகனப் புலவர்

எழுதிய

# யாழ்ப்பாண வைபவமாலை

இது

முதலியார் குல. சபாநாதன் அவர்கள்

பல. பிரதிருபங்களைக்கொண்டு பரிசோதித்து
எழுதிய ஆராய்ச்சிக் குறிப்புகளுடன்

'ஈழகேசரி' அதிபர்
திரு. நா. பொன்னையா அவர்களால்
பதிப்பிக்கப்பெற்றது.

 1949 [ விலை ரூ. 1-50

## சமர்ப்பணம்



புராதனப் பெருமை வாய்ந்த யாழ்ப்பாண நாட்டின் சரித்திர சம்பந்தமாக ஆங்கிலத்திலும் தமிழிலும் ஆராய்ச்சி நூல்கள் எழுதி வெளியிட்ட அறிஞர், **முதலியார் செ. இராசநாயகம்,** C.C.S., அவர்களது ஞாபகார்த்தமாக இந்நூல் வெளியாகின்றது.



திருமகள் அழுத்தகம், சுன்னாகம்.

முதலியார் செ. இராசநாயகம், அவர்கள், C. C. S.




Courtesy : 'Eelakesari'

தோற்றம் : 22 - 10 - 1870.
மறைவு : 17 - 1 - 1940.

# முன்னுரை

இலங்கையில் தமிழ் மக்கள் பல நூற்றுண்டுகளாக நிலைபெற்றுத் தமது ஆதிக்கத்தைப் பரவச்செய்த வரலாறு தமிழகச் சரிதத்தில் ஒரு முக்கிய பகுதியாகும். யாழ்ப்பாணத்தில் தமிழரசர் பாரம்பரியமாக ஆண்டுவந்ததோடு, போர்த்துக்கேயர் என்ற பறங்கியர் இலங்கைக்கு வருவதற்கு முன், சிங்கள மன்னரும் தங்களுக்குத் திறை செலுத்துமாறு மேன்மையுற்று விளங்கினர். யாழ்ப்பாண மன்னர்களின் சரித்திரத்தை ஆராய்ந்து அறிதற்குத் துணைசெய்யும் ஆதார நூல்கள் கைலாய மாலை, வையா பாடல், யாழ்ப்பாண வைபவ மாலை என்பன.

இவற்றுள் யாழ்ப்பாண வைபவ மாலை விரிவானது; தெளிவான வசனநடையிலுள்ளது. தமிழில் சரித்திர முறையில் எழுதப்பட்ட நூல்கள் மிகச் சிலவே. யாழ்ப்பாண வைபவமாலை இவ்வகையில் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு முக்கிய இடம் பெறுதற்குரியது. இதன் ஆசிரியர் யாழ்ப்பாணத்தில் ஒரு சிறந்த வித்துவ குடும்பத்தில் தோன்றிய மயில்வாகனப் புலவராவர். இவர் ஏறக்குறைய இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். அக்காலத்தில் கர்ண பரம்பரையாக அறிந்த வரலாறுகளை இவர் கைலாய மாலை, வையா பாடல் என்ற நூல்களிற் கூறப்பட்ட செய்திகளோடு இயைத்து, யாழ்ப்பாண வைபவ மாலை என்ற நூலை எழுதியுள்ளார் எனத் தெரிகிறது. இதிலுள்ள வரலாறுகள் யாவும் சரித்திர உண்மைகளாகக் கொள்வதற்கில்லை. ஆயினும் இந்நூல் சரித்திர ஆராய்ச்சியாளர்க்கு மிகவும் பயன்படத்தக்கது.

இந்நூல் இதுகாறும் திருத்தமான முறையில் அச்சிடப்படவில்லை. அச்சிடப்பட்ட பிரதிகளும் இப்பொழுது கிடைப்பது அருமையாய்விட்டது. இங்கிலையில் யாழ்ப்பாண வரலாற்றுராய்ச்சித் துறையில் அதிக ஆர்வத்துடன் உழைத்துவருகின்ற அறிஞர், திரு. குல. சபாநாதன் அவர்கள் இந்நூலைச் செவ்வனே பரிசீலனை செய்து, பல ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் பதிப்பிக்க முன்வந்தது மிகவும் பாராட்டற்குரியதாகும். இவ்வாராய்ச்சிக் குறிப்புகள் இந்நூலுக்கு ஒரு தனிச் சிறப்பைத் தருவன. திரு. சபாநாதன் அவர்கள் செய்துள்ள இவ்வரும் பணி, யாழ்ப்பாணச் சரித்திரத்தை ஆய்ந்தறியுமாறு பலருக்கும் ஊக்கம் அளிக்கும் என்பது திண்ணம்.

இராமநாதன் கல்லூரி
சுன்னாகம், 9-6-49

சு. நடேசபிள்ளை

# பதிப்புரை

யாழ்ப்பாண வைபவ மாலை எனும் சரித்திர நூல் முதன்முதலில் வட்டுநகர் திரு V. V. சதாசிவப்பிள்ளை அவர்களால் 1884-ம் ஆண்டு சென்னையில் அச்சிடப்பட்டது. முதற் பதிப்பிலேயே பதிப்பாசிரியர் தாமாக ஒரு பகுதியினை எழுதிச் சேர்த்துவிட்டார். அப்பகுதி இந் நூலின் இறுதியில் அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ளது. அதன்பின்னர் மேற்படியூர் திரு சி. பாலசுப்பிரமணிய சர்மா அவர்கள் இந்நூலிற் சிலவற்றைக் கூட்டியும் குறைத்தும் 'யாழ்ப்பாண வைபவம்' எனும் பெயருடன் 1916-ல் அச்சிட்டார்கள். இதன் இரண்டாம் பதிப்பு சங்கானை திரு. சு. பொன்னுச்சாமிப்பிள்ளையவர்களால் 1927-ல் வெளியிடப்பட்டது. வைபவமாலையின் ஆங்கில மொழி பெயர்ப்பு நியாயவாதி சி. பிறிற்றோ (C. Britto) அவர்களால் கி. பி. 1899-ல் அச்சிடப்பட்டது. பிற்காலத்தில் இந் நூற்பதிப்புகளும் கையெழுத்துப் பிரதிகளும் கிடைப்பது அரிதாகிவிட்டது. இந்நிலைமையினைக் கண்டு கவன்ற முதலியார் செ இராசநாயகம் அவர்கள் லண்டன்மாநகரத்து நூதனப் பொருட்சாலையில் கீழைத்தேச நூல்நிலையப் பகுதியில் இருந்த வைபவமாலைப் பிரதியினை வரவழைக்க முயன்றார்கள் அக்காலத்தில் அவர்கள் இலங்கைச் சரித்திரச் சுவடிப் பாதுகாப்புச் சபையின் (Historical Manuscripts Commission) ஓர் அங்கத்தவராய் இருந்தமையால் அச் சபைமூலம் லண்டனிலுள்ள கையெழுத்துப் பிரதியின் படப்பிரதியை (Photostat Copy) எடுப்பித்தார்கள். பின்னர் அதனைப் பிரதிசெய்து அச்சிடக் கருதினார்கள். அதற்குரிய எழுத்துவேலை முழுவதையும் சனி ஞாயிற்றுக் கிழமைகளில் அவர் வீட்டுக்குச் சென்று யானே செய்து வந்தேன். அத்துடன் இந்நூலுக்கு அடிக்குறிப்புகளையும் அவர்களுடைய மேற்பார்வையின்கீழ் யான் எழுதினேன். இந்நூல் பாகம் பாகமாக 1939-ம் ஆண்டில் 'இலங்கை

வித்தியா சமாச்சாரப் பத்திரிகை'யில் வெளிவந்தது. அப்பொழுது முதலியார் அவர்கள் எமது அடிக்குறிப்புக்களைப் பற்றிப் பின்வருமாறு எழுதினார்கள் :- "இந் நூல் மாணவர்க்கும் பிறர்க்கும் பல்கால் உதவி செய்யுமெனவோர்ந்து எனது நூலையும் பிறசரித்திராசிரியர், ஆராய்ச்சியாளர் கொள்கைகளையும் வைத்தாராய்ந்து கொழும்பு வித்தியாசுந்தோரில் ஓர் எழுத்தாளரும், தமிழறிஞரும், நுண்ணறிவாளரும், ஈழநாட்டுப் புலவர் வரலாறு தெரிக்கும் பணியைச் செய்துவருபவருமாகிய திரு. குலசபாநாதன் அவர்கள் குறிப்புரையுமொன்று எழுதி உதவியிருக்கின்றார்கள். அக்குறிப்புரை இந்நூலைத் தெள்ளி வடித்துச் செய்திகளை யொருவாறு உள்ளபடி அறிவித்தற்குப் பேருதவியாயிருப்பதை இந்நூலை வாசிப்போர் இனிது அறிவர்".

முதலியார் அவர்கள் இந்நூலுக்கு ஏற்ற ஆங்கில மொழிபெயர்ப்பினையும் சேர்த்து வெளியிடக் கருதி அப்பணியில் ஈடுபட்டிருந்தார்கள். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அம் மொழிபெயர்ப்புப் பூரணமாவதற்கு முன் அவர்கள் 17-1-40-ல் இவ்வுலக வாழ்வை நீத்து இறைவன் திருவடி நீழலை யடைந்தார்கள். பின்னர் முதலியார் அவர்களுடைய சிரேஷ்ட புதல்வர் திரு. இ. நாயகம் அவர்கள் இம் மொழிபெயர்ப்பு வேலையைப் பூர்த்திசெய்யுமாறு என்னைப் பணித்தார்கள். அங்ஙனமே அதனைச் செய்துமுடித்தேன். ஆனால் அதனைத் தனி நூலாகப் பின்னர் வெளியிடக் கருதி இந்நூலுடன் சேர்க்காது நீக்கிவிட்டேன்.

சில வருடங்களுக்குப் பின்னர் யான் சென்னைக்குச் சென்றிருந்தபொழுது திரு. தி. த. கனகசுந்தரம்பிள்ளை அவர்களின் புதல்வர் திரு. க. இராஜேஸ்வரன் அவர்கள் வீட்டுக்குச் சென்றிருந்தேன். யாழ்ப்பாண வைபவமாலைப் பிரதி எங்கேயாவது கிடைக்குமோவென அவர்களை உசாவியபோது அவர்கள் தம் தந்தையார் தேடிப் பேணி வைத்திருந்த ஏட்டுப் பிரதியைத் தந்தது மட்டுமன்றி வைபவமாலை முதற்பதிப்புப் பிரதியொன்றையும் தந்துதவி

